விதைகளாகப் பதிந்து, பல வருஷங்களுக்குப் பின்னால் பெரிய மரங்களாக வளர்ந்து, சுற்றிலும் உள்ளவைகளுக்கு நிழல் கொடுக்க ஆரம்பித்தன.

**10**
26

'**சா**லமங்கா... அந்தப் போரின் முடிவு பரிதாபகரமாயிருந்தது.' 1812-ஆம் வருஷம் ஜூலை மாதம் 12-ந் தேதி சாலமங்காவில் நடந்த போரில் வெல்லிங்டன் வெற்றி பெற்றார். ஸ்பெயின் தேசத்தில், அந்நாட்டு மக்களை அடிமையாக வைப்பதற்கு நெப்போலியன் செய்த முயற்சிகளுக்கு, மக்களின் இடைவிடாத பலமான எதிர்ப்பு இருந்தது. பெனின்ஸுலார் போரில் அவருடைய பலமெல்லாம் கரைந்து போயின. ருஷ்யாவை அடக்குவதற்கு அவர் செய்த முயற்சியில் ஏற்பட்ட தோல்விக்கு, இந்த பெனின்ஸுலார் யுத்தத்தினால் ஏற்பட்ட நஷ்டங்களே முக்கியமான காரணம்.

'சக்கரவர்த்தினியிடமிருந்து மாட்சிமை தங்கிய உமக்கு ஒரு பரிசு.' இந்த இடத்தில் வருகிற நெப்போலியனைப் பற்றியும், அவருடைய குமாரருடைய சித்திரத்தைப் பற்றியும் உள்ள காட்சிக்கு வேண்டிய தகவல்களை, டி பாசெட் தாம் எழுதிய 'ஞாபகக் குறிப்புகள்' என்ற புத்தகத்தில் கூறுகிறார். டால்ஸ்டாய் இந்த விவரங்களைத் தமது கலை நோக்கங்க்ளுக்காக மட்டுமே உபயோகிக்க விரும்பியபடியால், அந்த ஞாபகக் குறிப்பில் காணப்பட்டுள்ள சோகத் தொனிகளையெல்லாம் மாற்றி விட்டார். உதாரணமாக, நெப்போலியனைப் பார்த்து பாசெட் பேசியபோது, அவரை மாஸ்கோவில் சந்திப்பதற்குத் தாம் எதிர்பார்த்திருந்ததாகக் கூறினார். நெப்போலியன் புன்சிரிப்போடு அதற்கு பதில் சொல்லும்போது, 'நீர் மாஸ்கோவைப் பார்ப்பீர்' என்று கூறுகிறார். உடனே பராக்கு புத்தியில் வலது பக்கம் திரும்பிப் பார்க்கிறார். வழக்கமாக அப்பார்வையின் அர்த்தத்தைப் புரிந்துகொண்ட அவருடைய மெய்க்காப்பாளர், அவரிடம் பொடி டப்பியைக் கொண்டு வந்து கொடுக்கிறார். கோபமாயிருக்கும்போதும், ஏதாவது இடையூறுகள் ஏற்படும்போதும், நெப்போலியன் பொடி போடுவதை வழக்கமாகக் கொண்டிருப்பதாக, டால்ஸ்டாயின் நாவலில் காணப்படுகிறது. பலாஷேவுடன் அவர் பேசியபோது, அவருடைய மனப்போக்கு அடிக்கடி மாறும் போது, இந்தப் பொடி போடும் வழக்கத்தைக் காணலாம். இங்கே எடுத்துக் கொண்ட விஷயத்தில் புகழ்ச்சியான வார்த்தைகளைக் கேட்டவுடன், அவர்

புன்சிரிப்போடு பதில் அளித்துக் கொண்டு வருகிறார். ஆனால், மாஸ்கோ என்ற வார்த்தையைக் கேட்டதும், அவர் பொடி டப்பிக்காகத் திரும்பிப் பார்ப்பதானது, அவருடைய மனக் குழப்பத்தைக் காட்டுகிறது. தமது நாட்டிலிருந்து ருஷ்யாவுக்குள் வெகு எளிதாக வெகு தூரம் முன்னேறியதால், அவருக்கு ஏற்பட்டுள்ள மனக்குழப்பத்தை அது காட்டுகிறது. ஸ்மாலென்ஸ்க் நகரில் கைதியாகப் பிடிக்கப்பட்ட ஜெனரல் டுச்கோவுடன் அவர் சமீபத்தில் நடத்திய உரையாடல்களும், இச்சமயத்தில் சமாதானத்திற்காக அவர் செய்த பிரேரணைகளும், பாராடினோவுக்கு முன்பாக இந்த விசித்திரமான யுத்தத்தின் போக்கைப் பற்றி அவர் மிகுந்த கவலை கொண்டிருந்ததைக் காட்டுகின்றன. இந்த யுத்தத்தில் தாம் எஜமானராக இருப்பதாக அவர் உணரவில்லை. அதற்குப் பதிலாக, அவர் மீது சுமத்தப்படும் நிபந்தனைகள், அவர் நிறைவேற்றவேண்டியவராயிருக்கிறார் என்று உணர்ந்தார்.

**10**
**34**

'லோடி, மாரங்கா, ஆர்க்கோலா, ஜெனா, ஆஸ்டர்லிட்ஜ், வாக்ராம்'. நெப்போலியனுக்குப் பிரமாதமான வெற்றி கிடைத்த இடங்களில் இவை சில. லோடியும் மாரங்காவும் வடக்கு இத்தாலியில் இருக்கின்றன. 1800-ஆம் வருஷத்தில் அங்கே ஆஸ்திரியர்களை நெப்போலியன் தோற்கடித்தார். வெரானா என்ற இடத்திற்குப் பக்கத்தில் ஆர்க்கோலா என்ற கிராமம் இருக்கிறது. 1796-ல் தம்முடைய ராணுவத்தை விட பலமடங்கு அதிகமான ஆஸ்திரிய ராணுவத்தை அந்த இடத்தில் நெப்போலியன் தோற்கடித்தார். ஜெனா என்ற இடத்தில் 1806-ஆம் வருஷத்தில் பிரஷ்யர்களும் சாக்ஸன்களும் படுதோல்வி அடையும்படி நெப்போலியன் செய்தார். வாக்ராம் என்ற கிராமம், வியன்னாவுக்குப் பக்கத்தில் இருக்கிறது. 1809-ஆம் வருஷத்தில் அந்த இடத்தில் ஆஸ்திரியர்கள் மீது ஒரு முடிவான வெற்றியை நெப்போலியன் பெற்றார். ஆஸ்திரிய யுத்தம் அதோடு முடிவடைந்தது.

**10**
**35**

'உர்ட்டெம்பர்க் கோமகன்', கோமகன் அலெக்ஜாண்டர் பிரடெரிக் என்பவர், உர்ட்டெம்பர்க் கோமகன் ஆவார். (1771-1833) மரியா பெடாராவ்னா என்ற சக்கரவர்த்தினியின் சகோதரர். அவள் சக்கரவர்த்தி பால் என்பவருடைய சக்கரவர்த்தினி

யாகும். 1800-ஆம் வருஷத்தில் ருஷ்ய சேவையில் கோமகன் சேர்ந்தார்.

'முராட் கைதியாகப் பிடிக்கப்பட்டார் என்ற செய்தி'. இந்த செய்தி கடைசியாக பொய்யானது என்று வெளியாயிற்று. ஜெனரல் பானாம் என்பவரைத்தான் கைதியாகப் பிடித்தார்கள். ஒரு ருஷ்ய கைக்குண்டு வீரர், துப்பாக்கி ஈட்டியைத் தமது நெஞ்சிற்கு நேராகக் கொண்டு வருவதைப் பார்த்தவுடன், அவர் 'நான்தான் மன்னர்' என்று கூச்சலிட்டார். ஆகவே, அவரை உயிரோடு குட்டுஜோவிடம் அழைத்துச் சென்றார்கள். முராட் கைது செய்யப் பட்டதாக ஏற்பட்ட பொய் வதந்தியை, துருப்புகளின் அணிகள் வழியாகக் குதிரை மீது சவாரி செய்துகொண்டு ஒரு மேஜர் தெளிவற்ற விதமாக சொல்லிக் கொண்டு போனார்.

**10** **38** '32-வது ராணுவ டிவிஷன்' அந்த டிவிஷன் மார்ஷல் டாவூட்டின் டிவிஷனாகும். அதிலுள்ளவர்களை, முக்கியமாக வராம்பெர்க் - பிரம்மென் பகுதியிலிருந்து ராணுவத்தில் சேர்த்தார்கள்.

